Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு



**லட்சியம்**

நடைமுறைக்கு ஏற்ப செயல்படுவதும் ஒரு லட்சியத்தின் மீதுதான் கட்டப்பட வேண்டும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**வழிபாடு**

ஒழுக்கமாய் நடப்பது உயர்ந்த பண்புகள் கொள்வது இதுவே உண்மையான கடவுள் வழிபாடு.

-தந்தை பெரியார்

மலர்: 6 சென்னை 7 - 7 - 82 புதன் வெளியூர் 8 - 7 - 82 வியாழன் இதழ்: 257

## எம்.ஜி. ஆர். இளைஞர் அணி துவக்க விழா

# எழுச்சிக் கோலத்தில் இளைய தலைமுறை

### புரட்சித்தலைவரை பின்பற்றி புதிய சமுதாயம் படைக்க உறுதி

சென்னை, ஜூலை 7- எம்.ஜி.ஆர் இளைஞர் அணி துவக்க விழா இன்று காலை கலைவாணர் அரங்கில் ஆரம்பமாகியது தமிழகத்தின் பல்வேறு மாவட்டங்களிலிருந்தும் இளைஞர் பட்டாளம் எழுச்சி முகத்துடன் வந்திருந்தது. கூடியிருந்த அத்தனை இளைஞர்களின் முகத்திலும், 'புரட்சித்தலைவர் வழிநடப்போம், புதிய சமுதாயம் படைப்போம்' என்ற உறுதியின் வெளிப்பாடு தெரிந்தது.

இந்த அணியில்பங்கேற்க தமிழக இளைஞர் பட்டாளமே தலைநகருக்குத் திரண்டு வந்துள்ளது.

5 கோடி தமிழ் மக்களின் காவல் தெய்வமாம் புரட்சித் தலைவரது ஆட்சியின் புகழ் பரப்ப கழகமும், மன்றமும், மகளிர் தொழிலாளர் அணிகளும் பீடுநடை போட்டுப்பணி ஆற்றி வருகின்றன.

மற்றுமோர் படைக்கலனாக எம். ஜி. ஆர். இளைஞர் அணியின் துவக்கவிழா இன்றுகாலை கலைவாணர் அரங்கில் உணர்ச்சிப் பிரவாகம் கரைபுரண்டு ஓட நடைபெற்றது.

துவக்க விழா நடக்கும் கலைவாணர் அரங்க மேடை நன்கு அலங்கரிக்கப்பட்டு இருந்தது.

### வெள்ளமென திரண்டிருந்த இளைஞர் படை

அரங்கின் உள்ளேயும் வெளியேயும் இளைஞர்படை, மாணவர் பட்டாளம் திரண்டு இருந்தது.

வாலாஜா ரோடு அண்ணாசாலை எங்கும் கழகக் கொடிகள், தோரணங்கள்பட்டொளி வீசிப்பறந்து கொண்டு இருந்தன.

அமைச்சர்கள் ஆர். எம். வீ., பொன்னையன் ராகவானந்தம், எஸ். என். ராஜேந்திரன், திட்டக்குழு துணைத்தலைவர் பாவலர் முத்துசாமி, ஜேப்பியார் எம்.எல்.சி. அக்ரோ இண்டஸ்ட்ரிஸ் தலைவர் லியாகத் அலிகான், சுலோசனா சம்பத், திருச்சி ஆர். சவுந்திரராஜன் நீரோட்டம் ஆசிரியர் அடியார், பெரியவர் சங்கரய்யா மற்றும் பலர் வந்திருந்தனர்.

விழாவின் தொடக்கமாக நவரசம் ஜி. கே. எஸ். குழுவினரின் கலை நிகழ்ச்சி நடந்தது.

தமிழக அரசியல் வரலாற்றில் பேரறிஞர் அண்ணாவுக்குப் பிறகு அண்ணாவின் ஆட்சிதனை நடத்தும் புரட்சித் தலைவரது ஆட்சி சாதனைகளை நவரசம் ஜி. கே. எஸ். உணர்ச்சி கொப்பளிக்க இனிமை ராகத்துடன் பாடினார்.

சாதனைகளைப் பட்டியலாக்கி அவர் பாடப் பாட கை ஒலி எழுந்த வண்ணம் இருந்தது.

### கவியரங்கம்

இதன் பிறகு கவியரங்கம் தொடங்கியது.

மேலவைத் துணைத் தலைவர் புலவர்புலமைப் பித்தன் தலைமைக்கவிதை மழையைப் பொழிந்தார்.

வெண்தாடி வேந்தன், பகுத்தறிவுப் பகலவன் தந்தை பெரியாரில் தொடங்கி, தமிழகத்திற்கு வழி காட்டிச் சென்ற காஞ்சித் தலைவனது சிறப்புக்களை விவரித்து நேர்மை வழியில் ஆட்சியை நெறிமுறை தவறாது நடத்தும் புரட்சித்தலைவரது வள்ளல் தன்மை ஆட்சி சிறப்பு அனைத்தையும் கவிதையில் மழையெனப் பொழிந்தார். கைதட்டலால் அரங்கம் அதிர்ந்தது.

'புரட்சித்தலைவர் என் பார்வையில்' என்ற தலைப்பில் கவிஞர்கள் கவி பெருக்கம் ஓடியது.

இதில் 6 கவிஞர்கள் தங்களது கவிதைத் திறமையைக் காட்டி கவிதை படித்தனர்.

### கவிதை மழை

தாய் என்ற தலைப்பில் கவிஞர் முத்துலிங்கம் தனக்கே உரித்தான நடையில் கவிதை படித்தார்.

தாய்க்கு அடுத்து சேய் என்ற தலைப்பில் எழுச்சிக் கவிஞர் மணிமொழியின் கவிதை தவழ்ந்தோடியது.

ஆசான் என்றபொருளில் கரு.நாகராசன் மாணவன் என்ற பொருளில் கங்கை மணிமாறன், தலைவன் என்ற பொருளில் டி. கே. மதியானந்தம், தொண்டன் என்ற பொருளில் செல்வி சித்ரா ஆகியோரின் கவிதை மழையில் அனைவரும் நனைந்தனர்.

விழா துவக்கத்தில் வரவேற்றுப் பேசிய சட்டக்கல்லூரி மாணவர் மணிவாசகம் இளைஞர் அணியில் வந்து குவியும் மாணவர் பட்டாளங்களை பட்டியல்போட்டுக்காட்டினார்

### அணிஅணியாய் குவியும் இளைஞர்கள்

பச்சையப்பன் கல்லூரி மாணவர்கள் 500 பேர் எம். ஜி. ஆர். இளைஞர் அணியில் சேர்ந்துள்ளனர்.

மாநிலக் கல்லூரியில் இருந்து 400 மாணவர்கள் அணியில் சேர்ந்துள்ளனர்.

சட்டக் கல்லூரியில் இருந்து 250மாணவர்கள் இந்த அணியில் சேர்ந்துள்ளனர் என்றபோது மாணவர்கள் ஆரவாரத்தோடு கைதட்டி வரவேற்றனர்.

பிற்பகலில் முடிந்த காலை நிகழ்ச்சியின்



இறுதியில் ச. அருணாசலம் நன்றி கூறினார்.

மாலை 4 மணிக்கு பட்டிமன்றம் நடைபெறுகிறது. அமைச்சர் பண்ருட்டியார் நடுவராக இருக்கிறார்.

மாலை 6 மணிக்கு இளைஞர் அணியை நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் துவக்கி வைத்து உரை ஆற்றுகிறார். முசிறிப்புத்தன் தலைமை வகிக்கிறார். அமைச்சர் ஆர்.எம்.வீ. சிறப்புரை ஆற்றுகிறார். அமைச்சர் பொன்னையன் இசைத்தட்டு வெளியிடுகிறார்.

---

## லியாகத்-அலிகான் பதவிநீடிப்பு

சென்னை, ஜூலை 7- தமிழ்நாடு அக்ரோ இண்டஸ்ட்ரீஸ் தலைவராக லியாகத் அலிகான் இருந்து வருவது தெரிந்ததே.

அவரது பதவிக்காலம் 9—7—82 முதல் மேலும் இரண்டு ஆண்டுகளுக்கு நீடிக்கப்பட்டிருப்பதாகத் தமிழக அரசு உத்தரவிட்டுள்ளது.

---

முதல்வர் தலைமையில்

## திருவாரூர் தங்கராசு மகள் திருமணம்

சென்னை, ஜூலை 7- திராவிடர் கழக பொதுச் செயலாளர் திருவாரூர் தங்கராசு மகள் ரஷியா என்கிற மண்டோதரிக்கும், (ஒலிபரப்பு நிர்வாகி, சென்னை வானொலி நிலையம்) சென்னை ரங்கநாதன் மகன் ஆர். பிரசாத்துக்கும் (விரிவாக்க அதிகாரி, நியூஇந்தியா அஷ்யூரன்ஸ்) சென்னை கலைவாணர் அரங்கில், நாளை (8ந் தேதி) காலை 9 மணிக்கு முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் திருமணம் நடக்கிறது.

---

## சிறுபான்மை மொழியினர் நலனை காப்பீர்

### கர்நாடக முதல்வருக்கு ப.உ.ச. அவசரதந்தி

சென்னை, ஜூலை 7— கர்நாடக முதல்வர் குண்டுராவுக்கு கழகப் பொதுச் செயலாளர் ப.உ.ச. அனுப்பியுள்ள தந்தியில் கூறியிருப்பதாவது:—

கோலாரில் நடந்த கொடிய நிகழ்ச்சி அதிர்ச்சி ஏற்படுத்தியது. வன்முறையை ஆதரிப்பவரில்லை நாங்கள்.

என்றாலும் துப்பாக்கி சூட்டில் 8 தமிழர்கள் இன்னுயிர் பறிக்கப்பட்டது என்ற வேதனை தரத்தக்க செய்தி தாங்கவொண்ணாத் துயரமாக உள்ளது.

இந்தப் பிரச்னையில் கர்நாடகமுதல்வர் தலையிட்டு கர்நாடகத்திலுள்ள சிறுபான்மை மொழியினரின் நலனைப் பாதுகாத்து அவர்களுக்கு நீதி வழங்கிட வேண்டுகிறேன்.

மொழிவாரிசிறுபான்மையினர் பிரதிநிதிகளை அழைத்துக் கலந்து பேசி உங்கள் மாநிலத்திலுள்ள சிறுபான்மை மொழியினரின் நலனைப் பாதுகாத்து இப்பிரச்சினையில் தீர்வு காண தங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு பொதுச் செயலாளர் அந்தத் தந்தியில் குறிப்பிட்டுள்ளார்.

---

## கோலாரில் இன்றும் துப்பாக்கிசூடு: ஒருவர் சாவு

பெங்களூர், ஜூலை 7— கோகாக் கமிட்டி அறிக்கைக்கு எதிர்ப்பு தெரிவித்து நடக்கும் கிளர்ச்சியை அடுத்து கோலாரில் இன்று தொடர்ந்து 3—வது நாளாக போலீசார் துப்பாக்கி சூடு நடத்தினார்கள், இதில் ஒருவர் இறந்தார். மற்றும் 3 பேருக்கு குண்டுக் காயம் ஏற்பட்டது.

கோலாரில் தொடர்ந்து பதட்ட நிலை நிலவி வருகிறது.

---

இலவச மதிய உணவு திட்டம்:

# முதல்வரைப் பாராட்டி இந்து பத்திரிகையில் வாசகர்கள் கடிதம்

சென்னை, ஜூலை 7- அறுபத்து மூன்று லட்சம் ஏழைக் குழந்தைகளுக்கு இலவச சத்துணவு திட்டத்தை துவக்கியுள்ள முதல்வர் புரட்சித்தலைவருக்கு பாராட்டு தெரிவித்து இந்து பத்திரிகை வாசகர்கள் கடிதம் எழுதியுள்ளனர்.

முதல்வர் புரட்சித் தலைவரைப் பாராட்டி இந்து பத்திரிகை வாசகர்கள் எழுதியுள்ள கடிதங்கள் இந்து பத்திரிகையில் வெளிவந்துள்ளன.

ஈ. ஆர். பி. சண்முக சுந்தரம் என்ற வாசகர் எழுதியுள்ள கடிதத்தில் கூறி இருப்பதாவது:-

தமிழகத்தில் உள்ள ஏழைக் குழந்தைகள் அனைவருக்கும் ஒரு வேளை சத்துணவு திட்டத்தை தமிழ்நாடு முதல்வர் தொடங்கியுள்ளார்.

இதுஒரு புரட்சிகரமான விஞ்ஞான பரிசோதனையாகும். எல்லாக்குழந்தைகளுக்கும் இது பயன் தருவதாக இருக்கும்.

நான் 30 ஆண்டுகள் பல்வேறு துறைகளில் ஆராய்ச்சி விஞ்ஞானியாக பணியாற்றி இருக்கிறேன்.

### பொருளாதார சமூக முன்னேற்றம்

சத்துணவு குழந்தைகளுக்கு முக்கியமானதாகும். இந்தத் திட்டத்தின் பெரும் பகுதியை சமூகநலத்துறை கவனிக்கும் என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது.

ஒவ்வொருமாவட்டமும் விஞ்ஞானிகள் பொறுப்பில் இருப்பது நல்லது.

ஏழைக்குழந்தைகளுக்கு ஒருவேளை சத்துணவு தருவதால் சமூக பொருளாதாரம் முன்னேற்றம் ஏற்படும். இந்தத் திட்டத்திற்கு பெரும் அளவில் ஒத்துழைப்பு கிடைக்கும் இவ்வாறுசண்முகசுந்தரம் எழுதியுள்ளார்.

வி. என். நாராயணசாமி என்ற வாசகர்எழுதியிருப்பதாவது:—

காமராஜர் துவக்கிய திட்டம் என்றாலும் இப்போது இந்தத் திட்டத்தால் ஆண்டு முழுவதும் ஏழைக் குழந்தைகளுக்கு ஒரு வேளை சத்துணவு கிடைக்கும்.

பெற்றோர்களால் இப்படிப்பட்ட சத்துணவை அளிக்க இயலாதவர்களுக்காக அரசு இந்தப் பணியில் ஈடுபட்டுள்ளது.

குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தை உணரவைக்க வேண்டும். இல்லாவிட்டால் குழந்தைகள் எண்ணிக்கை ஆண்டுக்கு ஆண்டு அதிகரிக்கும்.

தாய்நாட்டுப்பற்றுள்ள ஒவ்வொரு இந்தியனும் குடும்பக்கட்டுப்பாடு செய்துகொள்ள முன்வர வேண்டும் என்று நாராயணசாமி எழுதியுள்ளார்.

### சதானந்த்

எம். ஏ. சதானந்த் என்ற வாசகர் எழுதியிருப்பதாவது:—

63 லட்சம் ஏழைக் குழந்தைகளது பசிக்கும் வயிற்றுக்கு தமிழக முதல்வர் உணவளிக்க முன் வந்துள்ளார்.

ஆண்டில் 365 நாட்களும் இந்த சத்துணவு அவர்களுக்கு கிடைக்க இருக்கிறது. நான் படித்தவரலாற்றுப் புத்தகங்களில் இல்லாத வகையில் கலைக் களஞ்சியங்களில் காண முடியாத வகையில் மண்ணில் பிறந்த முதல் மனிதன் ஆதாம் காலத்திலிருந்து எந்த அரசும் இப்படிப்பட்ட ஒரு திட்டத்தை அறிவிக்கவில்லை.

இந்த சத்துணவு ஏழைக் குழந்தைகளது வயிற்றுக்குச் செல்லும் போது இதயத்தைத் தொடும். அது ஒரு புதிய தலைமுறையை உருவாக்கும். அதற்கான வழியை இந்த திட்டம் உருவாக்கும்.

ஏழைக் குழந்தைகளுக்கு சத்துணவு அளிப்பதால் 65 லட்சம்குழந்தைகள் — அவர்களது பெற்றோர்கள் தமிழக முதல்வருக்கு வரும் ஆண்டில் நோபல் பரிசை வழங்கவேண்டும் என்ற ஒட்டுமொத்தமாக குரல் எழுப்புவார்கள். அந்த அளவுக்கு உள்ளத்தைத் தொட்டுள்ளது என்று சதானந்த் எழுதியுள்ளார்.

---

தமிழக தலைநகர் மாற்றம்

# முதல்வர் தெரிவித்த யோசனைக்கு மத்திய அதிகாரி வரவேற்பு

பெங்களூர், ஜூலை 7- தமிழ்நாட்டின் தலைநகரை சென்னையிலிருந்து தமிழகத்தின் மத்திய பகுதிக்கு மாற்றலாம் என்று முதல்வர் புரட்சித்தலைவர் வெளியிட்ட யோசனையை மத்திய அதிகாரி வரவேற்றுள்ளார்.

நகர சுற்றுப்புற ஆய்வு நிலைய டைரக்டர் டாக்டர் மயூர் இதற்கு ஆதரவு தெரிவித்துள்ளார்.

கர்நாடக, மராட்டிய தலைநகர்களையும் மாற்றுமாறு அவர் யோசனை தெரிவித்துள்ளார்.

பெங்களூரில் ஒரு நிகழ்ச்சியில் கலந்து கொண்டு டாக்டர் மயூர் பேசியதாவது:—

பெங்களூர் நகரம் அதிவேகமாக வளர்ந்து வருகிறது. சராசரி 7.6 சதவிகித வளர்ச்சிஇருந்து வருகிறது.

தோட்டங்களாக இருந்த பெங்களூர் ஒருபக்கம் குடிசை மயமாகவும், மறுபக்கம் கல்கத்தா போலவும் வளர்ந்து வருகிறது.

ஆகவே கர்நாடகதலைநகரை பெங்களூரில் இருந்து பெல்லாரி மாவட்டத்தில் உள்ள ஹாஸ்பெட்டுக்கு மாற்றுவது நல்லது.

தலைநகராக இருக்க ஹாஸ்பெட் தகுதியான நகரம் ஆகும். கிராம மக்களுக்கு இது வசதியாகவும் இருக்கும். விஜயநகர உருக்காலை திட்டத்திற்கும் இது உதவும்.

அதுபோல மராட்டிய தலைநகரை பம்பாயில் இருந்து நாசிக்கிற்கு மாற்றுவது நல்லது.

தமிழ்நாடு "முதல்வர் தமிழ் நாட்டில் தலைநகரை சென்னையில் இருந்து தமிழகத்து மைய இடத்திற்கு மாற்றலாம் என்று தெரிவித்திருக்கும் யோசனை வரவேற்புக்குரியதாகும்.

இவ்வாறு டாக்டர் மயூர் கூறினார்.

## பொதுச் செயலாளர் ப. உ. ச. நிகழ்ச்சிகள்

ஜூலை 15- சேந்தமங்கலம்
,, 16- ஆத்தூர் (சேலம்)
,, 17- காஞ்சிபுரம்
,, 19- காவிரிப்பாக்கம்
,, 25- நாகர்கோயில்



# கருணாநிதியிடம் இன்னும் மானம் இருக்கிறதா என்ன? அமைச்சர் காளிமுத்து கேள்வி

**மதுரை, ஜூலை 7- குழந்தைவேலு தன்னைப் பற்றி பேசியதால் மானம் போய் விட்டதெனக் கூறும் கருணாநிதியிடம் இன்னும் மானம் இருக்கிறதா என்ன? என்று அமைச்சர் காளிமுத்து கேட்டார்.**

மதுரை முனிச்சாலையில் 35-வது வட்ட கழக சார்பில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்தில் கலந்து கொண்டு பேசிய அமைச்சர் காளிமுத்து கூறியதாவது:—

இங்கு முத்தண்ணன் பேசும்போது கருணாநிதி எதை எதையோ பேசுகிறார் என்று கூறினார். சீவக சிந்தாமணியில் ஒரு கதை. ஒருவனை யானை துரத்துகிறது. அவன் ஒரு பாழும் கிணற்றில் விழுகிறான். ஆனால் அவன் தண்ணீரில் விழவில்லை. இடையில் இருந்த செடியைப் பிடித்து தொங்குகிறான். அவனது காலுக்கடியில் நல்லபாம்பு படம் எடுத்து ஆடுகிறது. கிணற்றுக்கு மேலே யானை நிற்கிறது. இந்நிலையில் அவன் பிடித்து தொங்கிக் கொண்டிருந்த செடியை எலி கடிக்கிறது அவன் தவிக்கிறான். அதே நேரத்தில் கிணற்று மேல் உள்ள மரத்தில் தேன் கூடு கலைந்துதேன் சொட்டுச் சொட்டாக விழுகிறது. கையறு நிலையில் இருந்த அவனும் அந்த நிலையில் அந்தத் தேனைச் சுவைக்கிறான்.

பாராளுமன்றத் தேர்தலில் வெற்றி கிடைத்த போது கருணாநிதி தேன் கிடைத்தவர் போல மகிழ்ச்சி அடைந்தார் ஆனால், அதன் பின்னர் நடந்த சட்டமன்ற தேர்தலில் தோல்வி அடைந்தார்.. தமிழ் மக்களால் புறக்கணிக்கப்பட்ட அவர் இன்று புரட்சித் தலைவரை இனபேதம் பிரித்து பேசுகிறார். அது பற்றி குழந்தைவேலு பதில் சொன்னால் மானம் போய்விட்டது போல கூப்பாடு போடுகிறார்.

இதை எண்ணும்போது ஒரு கதை என் நினைவுக்கு வருகிறது. பட்டினத்தாரிடம் அவருடைய தமக்கை நஞ்சு வைத்து அப்பத்தைக் கொடுத்தாராம். அதை வாங்கிய பட்டினத்தார் "ஒட்டப்பம் வீட்டைச் சுடும்" என்று வீட்டுக் கூரை மீது எறிந்துவிட்டு போய்விட்டார். வீடு தீப்பிடித்து எறிந்தது. அது போல கருணாநிதி கழகத்திற்கு தந்த ஒட்டப்பம் கருணாநிதியின் வீட்டையே கொளுத்துகிறது.

கருதியிருக்கக் கூடும்.

மானம் போய் விட்டது என்று கூறும் கருணாநிதியைக் கேட்கிறேன். இந்திரா காங்கிரஸ் சுரண்டி எடுத்து விட்ட பிறகு மானம்போவதற்கு அங்கே என்ன இருக்கிறது? கறுப்புக் கொடி காட்டிய இந்திராவுக்கு கறுப்பு சிகப்பு கொடி காட்டி வரவேற்றபோது மானம் எங்கே போயிற்று? முழுக்க முழுக்க நனைந்த பிறகு முக்காடு எதற்கு? தமிழுக்காக பாடுபடும் கழக அரசைப்பழிக்கும் கருணாநிதி தமிழ் தெரியாத நீதிபதியை நியமித்தபோது என்ன செய்தார்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து கூறினார்.

கூட்டத்தில் மதுரை முத்தண்ணன், எம்.எல்.சி பொ. அன்பழகன் எம்.பி. பாலுசாமி எம். எல். ஏ. வெ. பாலகுரு, மதுரை இளவரசன், கே. எஸ். ராஜேந்திரன் ஆகியோர் பேசினர்.

கூட்டத்திற்கு கிருஷ்ண மூர்த்தி தலைமை வகித்தார்.

புதுவை தி மு க. முதல்வர் ஆட்சியில்

# இலவச உணவு, தாலிக்கு தங்கம் மோசடிகள்

## லோகநாதன் கண்டனம்

**பாண்டிச்சேரி, ஜூலை 7-தமிழ்நாட்டில் இலவச உணவுத்திட்டம அமுல்படுத்துவது புதுவை அரசை பார்த்துத்தான் என்று கூறிய தி மு க.முதல்வர் டி ராமச்சந்திரனுக்கு லோகநாதன் கண்டனம் தெரிவித்தார்.**

புதுவை மாநில கழக செயலாளர் பி.கே. லோகநாதன் விடுத்துள்ள அறிக்கை வருமாறு:—

பாண்டிச்சேரி அரசு இலவச உணவுத் திட்டத்தை செயல் படுத்துவதாகவும் அதைப் பார்த்துத்தான் தமிழ் நாட்டில் இலவச உணவுத் திட்டத்தை புரட்சித் தலைவா செயல்படுத்துவது போலவும் புதுவை தி. மு. க. முதல்வர் டி. ராமச்சந்திரன் காரைக்கால் பொதுக் கூட்டத்தில்பேசி இருப்பது சுத்த மோசடியாகும்.

### பொய், புளுகே மூலதனம்

ஆண்டு முழுவதும் ஏழைக் குழந்தைகளுக்கு கீரைகாய்கறி வகையுடன் தமிழகத்தில் சாப்பாடு வழங்கும் திட்டத்தை அமுல் படுத்து கிறார் புரட்சித்தலைவர். இப்படிப்பட்ட திட்டம் பாண்டிச்சேரியில் அமுல் படுத்தப்பட வில்லை. பாண்டிச்சேரியில் மட்டுமல்ல. இந்தியாவில் வேறு எங்கும் அமுல் படுத்தப் படவில்லை. புதுவை முதல்வரின் பொய்ப்பேச்சு கேலிக் கூத்தாக உள்ளது.

தாலிக்குத் தங்கம் தருகிறாம் என்றும் புதுவை தி. மு. க. முதல்வர் கூறி வருகிறார். இதுமற்றொரு பொய்யாகும். அப்படி ஒருதிட்டம்அமுல்படுத்தப் படுகிறது என்றால் பட்ஜெட்டில் அதற்காக எவ்வளவு நிதி ஒதுக்கப் பட்டுள்ளது? தி. மு. க. முதல்வர் சொல்வாரா?

இப்படி பொய்பேசி மக்களை ஏமாற்ற முயல்வது முறையா?

இவ்வாறு பி.கே.லோகநாதன் அந்த அறிக்கையில் கூறியுள்ளார்.

### முழுக்க நனைந்தபின் முக்காடு ஏன்?

முள்ளை முள்ளால் தான் எடுக்கவேண்டும். வைரத்தை வைரத்தால் தான் அறுக்கவேண்டும். நஞ்சை நஞ்சால்தான் எடுக்கவேண்டும் என்பார்கள். புரட்சித்தலைவரை குறைகூறிய கருணாநிதிக்கு இப்போது தன்னையே நிலைநாட்டிக் கொள்ள வேண்டிய நிலை வந்து விட்டது. புறநானூற்று பாணியில் வஞ்சினம் பாடுவதுபோல் உண்ணாவிரதம் இருப்பேன்என்று சென்னையில் கூறினார் கருணாநிதி. ஆனால் சென்னையில் பொங்கியது பெங்களூரில் மங்கிவிட்டது. காரணம் தெரியவில்லை. இதற்கு காரணம், உண்ணாவிரதம் இருந்தால் எடை குறையும். எடை குறைந்தால் எடைக்கு எடை வாங்குவது குறையும். எனவே வருமானம் குறையும் என்று கருணாநிதி

லட்சம்பேர் பங்கேற்பு:

# மாநாடுபோல் நடந்த திருவண்ணாமலை பொதுக் கூட்டம்

**வேலூர், ஜூலை 7-அண்ணா அறக்கட்டளைக்கு நிதியளிக்கும் பொதுக்கூட்டம் திருவண்ணாமலையில் ஒரு மாநாடு போல் நடந்தது லட்சம் பேர்கள் பங்கேற்ற இந்தக் கூட்டத்தில நிதியைப்பெற்று ப உ ச. சிறப்புரையாற்றினார்.**

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக பேரறிஞர் அண்ணா அறக்கட்டளைக்கு நிதி வழங்கும் பொதுக்கூட்டம் கடந்த 4ந் தேதி திருவண்ணாமலை தேரடி வீதியில் நடைபெற்றது.

திருவண்ணாமலை நகரம், மற்றும் தண்டராம்பட்டு, துரிஞ்சாபுரம் கீழ்பென்னாத்தூர், கலசப்பாக்கம், புதுப்பாளையம், திருவண்ணாமலை ஆகிய ஒன்றிய கழகங்களின் சார்பாக நடைபெற்ற இக்கூட்டத்தில் சுமார் ஒரு லட்சம் பேர் கலந்து கொண்டனர். வட ஆற்காடு மாவட்டம் முழுவதுமிருந்த இந்தக் கூட்டத்துக்கு ஏராளமானவர்கள் வந்திருந்தனர்.

பொதுக் கூட்டம் நடந்த இடத்தைச்சுற்றிலும் மின் விளக்கு அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. பொதுக் கூட்ட மேடையும் மின்விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது.

இந்த மாபெரும் பொதுக் கூட்டத்தில் அண்ணா அறக்கட்டளைக்கு 43 ஆயிரம் ரூபாய் நிதியளிக்கப்பட்டது. இந்த நிதியை கழகப் பொதுச் செயலாளர் ப. உ. ச. அவர்களிடம் ராமு அளித்தார்.

இந்தக் கூட்டத்திற்கு சி. என். விஸ்வநாதன் தலைமை வகித்தார். கே.பி. கண்ணன், மண்ணாங்கட்டி, மதியழகன், கோவிந்தசாமி, பாவாடைராயன், ஆகியோர் முன்னிலை வகித்தனர்.

நிதியைப் பெற்றுக் கொண்டு பொதுச்செயலாளர் ப. உ. ச. சிறப்புரையாற்றினார்.

ஜேப்பியார், திருவை அண்ணாமலை, புலவர் இந்திரகுமாரி, ஏ. கே. அரங்கநாதன், அன்பழகன், சாமிக்கண்ணு, புதுவை லோகநாதன்,

(3ம் பத்தி பார்க்க!

(5-ம் பத்தி தொடர்ச்சி)

ராதாகிருஷ்ணன், சக்தி எஸ். கண்ணன், வேடியப்பன், இதயதுல்லா ஆகியோர் பேசினர்.

ஏ. வி. எம். பன்னீர், பவுன்குமார் ஆகியோர் வரவேற்புரையாற்றகிருஷ்ணன் நன்றி கூறினார். பொதுக் கூட்டம் இவ்வளவு சிறப்போடும், சிறப்போடும் நடைபெறுவதற்கான ஏற்பாடுகளை மாவட்டத் துணை செயலாளர் கூடலூர் வேலு செய்திருந்தார்.



கழக எம்.எல்.ஏ.

### கே.எம்.எஸ்.எஸ் மகள் திருமணம்

போடி, ஜூலை 7— கழக எம்.எல்.ஏ கே.எம்.எஸ். சுப்பிரமணியன் மகள்லதாவுக்கும், திருச்சி எம். சுப்பிரமணியம் மகன் வைரத்திற்கும் திருமணம், போடிநாயக்கனூர் மீனாட்சி திரையரங்கில் 9-ந்தேதி காலை 10 மணிக்கு நடக்கிறது.

இந்நிகழ்ச்சிக்கு அமைச்சர் ஆர்.எம்.வீ.தலைமை வகிக்கிறார். அமைச்சர் ராஜாமுகமது முன்னிலை வகிக்கிறார்.

மணமக்களை வாழ்த்தி முத்தண்ணன், இரா. முத்தையா எம்.எல்.ஏ. எம்.சுருளிவேல், வி.எம். ராஜேந்திரன், தங்கப்பாண்டியர், வி. ஜெயராமன், கோபாலகிருஷ்ணன், ஆர்.டி.கோபாலன் ஆகியோரும் மற்றும் பலரும் பேசுகிறார்கள்.

காமராஜ் வரவேற்புரை ஆற்றுகிறார். ரெங்கராஜ் நன்றி கூறுகிறார்.

அண்ணா ஊழியர்

### ராஜமாணிக்கம் மகள் திருமணம்

அண்ணா நாளிதழ் ஊழியரான பி. என். ராஜமாணிக்கத்தின் இளையமகள் புனிதவதிக்கும், சிவலிங்கம் பிள்ளையின் மகன் செங்குட்டுவனுக்கும் திருமணம் 9-ந் தேதிகாலை 6-30 மணிக்கு மயிலம் முருகன் கோவிலில் நடக்கிறது.

### கழகதோழர் திருமணம்

சென்னை, ஜூலை 7. சென்னை 143வது வட்ட கழகப் பிரதிநிதி பி. வாஞ்சிநாதனுக்கும், கல்லிடைகுறிச்சி அரிகரன் மகள் சித்ராவுக்கும் ஆலந்தூர் ஏ. ஜே. எஸ். நிதி நிலைய திருமணக் கூடத்தில் நாளை 8-ந் தேதி காலை 7.30 மணிக்கு மேல் 9 மணிக்குள் திருமணம் நடக்கிறது.

# ரெயிலில் ஓசிப்பயணம்: நாயுடு கட்சியினர் முயற்சி தோல்வி

சென்னை, ஜூலை 7— டிக்கெட் வாங்காமல் ரெயில்களில் ஓசிப் பயணம் செய்ய நூற்றுக் கணக்கான நாயுடு கட்சியினர் மேற்கொண்ட முயற்சிகளை சென்னை எழும்பூர் ரெயில்வே அதிகாரிகளும் போலீசாரும் முறியடித்தனர்.

நாராயணசாமி நாயுடுவை தலைவராகக் கொண்ட விவசாயிகள் சென்னையில் பேரணி ஒன்றை நடத்தியது தெரிந்ததே.

இந்தப் பேரணியில் கலந்து கொண்டு விட்டு தங்களது ஊர்களுக்கு திரும்பவிருந்தசுமார் 500க்கும் மேற்பட்டவர்கள் நேற்று சென்னை எழும்பூர் ரெயில் நிலையத்தில் புகுந்து டிக்கெட் வாங்காமல் ரெயில்களில் ஓசிப்பயணம் செய்ய முயன்றார்கள்.

ரெயில் நிலையத்தில் அவர்கள் கும்பல் கும்பலாக நுழைவாயில்களில் புக முயன்றபோது ரெயில்வே அதிகாரிகளும் போலீசாரும் அவர்களை லாவகமாக தடுத்து நிறுத்தினார்கள்.

இப்படி இந்தக் கட்சியினர் ரெயில்வே நிலையத்திற்குள் புகுந்து டிக்கெட் வாங்காமல் ரெயிலில் ஏற முயல்வார்கள் என்பதை முன்கூட்டியே தெரிந்து கொண்ட ரெயில் நிலைய கண்காணிப்பு அதிகாரி எச்சரிக்கையுடன் செயல்பட்டார். ரெயில்வே போலீசாரையும் அதிகாரிகளையும் ஆங்காங்கே நிறுத்தி ஓசிப் பயணத்தை அறவே நிறுத்துவதில் ஈடுபட்டார்.

கும்பலாகக் கூடியிருந்த விவசாயக் கட்சியினரை அணுகி டிக்கெட் கொடுக்கும் இடத்துக்குச் சென்று டிக்கெட் வாங்கிக் கொள்ளும்படியும் அதிகாரிகள் கேட்டுக் கொண்டார்கள்.

டிக்கெட் வாங்காமல் உள்ளே விட டிக்கெட் பரிசோதனையாளர்களும் அறவே மறுத்து விட்டனர்.

இரும்புத் தொப்பி அணிந்த போலீசார் ஸ்டேஷனில் நிரம்பியிருந்ததைப் பார்த்தவர்கள் டிக்கெட் வாங்குவதில் ஈடுபட்டனர்.

ஆக நாயுடு கட்சியினர் மேற்கொள்ளவிருந்த ஓசிப்பயணத்தை அதிகாரிகள் சாமர்த்தியமாக முறியடித்தனர்.

---

இரண்டாம் நாளாக

# பீகாரில் மேலும் 21 எம். எல். ஏ.க்கள் சஸ்பெண்ட்

**பாட்னா, ஜூலை 7-பீகார் சட்டசபையில் நேற்று மேலும் 21 எம்.எல்.ஏக்கள் சஸ்பெண்ட் செய்யப்பட்டுள்ளனர். இதற்கு முன்பு 77 பேர் சஸ்பெண்ட் ஆகியிருக்கிறார்கள்.**

நேற்று சஸ்பெண்ட் செய்யப்பட்ட எம். எல். ஏக்கள் 4 நாட்கள் சஸ்பெண்ட் செய்யப்பட்டுள்ளனர்.

பீகார் மாநிலத்தில் பங்கல்வே என்ற கிராமத்தில் நடந்த கலவரம் பற்றி சபையில் விவாதம் நடத்த வேண்டும் என்பது எதிர்க்கட்சியினர் கோரிக்கையாகும்.

இதை வற்புறுத்தி எதிர்க்கட்சியினர் கூச்சல் குழப்பம் ஏற்படுத்தி வருகிறார்கள்.

நேற்று முன்தினம் 77 எம். எல். ஏ.க்கள் குண்டுக்கட்டாக வெளியே தூக்கிச் செல்லப்பட்டனர். அவர்கள் அனைவரும் 5 நாட்கள் சஸ்பெண்ட் செய்யப்பட்டனர்.

நேற்றும் இது தொடர்கதையானது. நேற்றும் எதிர்க்கட்சியினர் பங்கல்வே கிராம கலவரம் பற்றி விவாதம் நடத்தக் கோரினார்கள்.

இவர்கள் அனைவரும் சபைக் காவலர்களால் வெளியேற்றப்பட்டனர்.

சபைநடவடிக்கைகளில் இருந்து 4 நாட்கள் சஸ்பெண்ட் செய்யப்பட்டனர்.

324 உறுப்பினர்களைக் கொண்ட சட்டசபையில் எதிர்க்கட்சியினர் 132 பேர் இருக்கிறார்கள்.

இதில் இதுவரை 98 பேர் சஸ்பெண்ட் ஆகி இருக்கிறார்கள்.

## கவர்னர் மாளிகைக்கு ஊர்வலம்

எதிர்க்கட்சியினர் கூட்டம் நேற்று நடந்தது.

ஊர்வலமாக கவர்னர் மாளிகை சென்று இது குறித்து ஒன்று மனுக் கொடுப்பது என்று முடிவு எடுத்துள்ளனர்.

இதற்கிடையில் நேற்று முன்தினம் அமைச்சர்கள் மீது செருப்புகளை வீசிய கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர் செய்கையை கண்டித்து உரிமைப் பிரச்சினை கொண்டு வரப்பட்டுள்ளது.

நேற்று எதிர்க்கட்சியினர் 90 நிமிட நேரம் கோஷம் எழுப்பி கூச்சலிட்டனர்.

எதிர்க்கட்சியினர் 98 பேர்களை சஸ்பெண்ட் செய்தது நியாயம் தான் என்று பீகார் முதல்வர் ஜகந்நாத்மிஸ்ரா கருத்து தெரிவித்துள்ளார்.

---

# மோரீஸ் நாட்டுக்கு பிரதமர் இந்திரா பயணம்

போர்ட்லூயிஸ், ஜூலை 7— பிரதமர் இந்திராகாந்தி மோரீஸ் தீவில் 4 நாள் சுற்றுப் பயணம் செய்ய இருக்கிறார். ஆகஸ்டு 23-ந்தேதி அவர் அங்கு செல்கிறார். பிரதமருடன் அதிகாரிகள் குழுவும் செல்கிறது.

மோரீஸ் தீவில் சமீபத்தில் நடந்த தேர்தலில் இடதுசாரி அணி வெற்றி பெற்றபின், தங்கள் நாட்டுக்கு வருமாறு பிரதமர் இந்திராவை அந்த புதிய அரசு அழைத்தது. அந்த அழைப்பை ஏற்று பிரதமர் இந்திரா செல்கிறார்.

---

# அமைச்சர் எஸ். டி. எஸ் நிகழ்ச்சிகள்

ஜூலை 8ம் தேதி காலை 10மணி:- திருச்சி வீரக்குடியில் சுரம்பியம் முத்துசாமி இல்லத் திருமணம்.

9ம் தேதி காலை 10மணி முகவைமாவட்டம் பெருங்குளம் பள்ளிக் கட்டிடத் திறப்பு விழா- உதவிகள் வழங்கல். மாலை 3 மணி- ராமேஸ்வரம் துணை வட்டத்தை வட்டமாக உயர்த்தும் விழா.

10-ம் தேதி காலை 9 மணி நயினார் கோவில் மச்சிராஜன் இல்லத் திருமணம்.

காலை 11 மணி:— சாலியாவாகனபுரம் ம்மமங்கலம் பள்ளிக்கட்டிடத் திறப்புவிழா. மாலை 5 மணி பாண்டியூர் புயல் பாதுகாப்பு கட்டிடத் திறப்பு விழா.

---

ரூ. 25 லட்சம் செலவில்

வீராணம ஏரி

பழுது பார்க்கும் வேலை:

# கழக எம்.எல்.ஏ. சாமிநாதன் முயற்சி வெற்றி

கடலூர், ஜூலை 7— புவனகிரி தொகுதி கழக சட்டமன்ற உறுப்பினர் வி. சாமிநாதன் முயற்சியால் ரூபாய் 25 லட்சம் செலவில் வீராணம் ஏரி பழுதுபார்க்கும் வேலை நடைபெற்று முடிந்துள்ளது.

இம்மாதம் 25-ம் தேதி இந்த ஏரியில் தண்ணீர் திறந்து விடப்படவிருக்கிறது.

---

திருக்குறளை எழுதி அலங்கரிக்கும் பணிகள்

# கோலாலம்பூர், ஜெனிவாவில் பூம்புகார் நிறுவனம் சாதனை:

## அமைச்சர் கே. ஏ. கே. தகவல்

**தஞ்சாவூர், ஜூலை 7- கோலாலம்பூரில் உள்ள வள்ளுவர் கோட்டத்தில் திருக்குறள்களை எழுதி அலங்கரிக்கும் வேலைகளை பூம்புகார் நிறுவனம மேற்கொண்டிருக்கிறது; ஜெனிவாவில் மகாபாரதத்தை சித்தரிக்கும் ஓவியங்களை தீட்டி சாதனை புரிந்துள்ளது என்று அமைச்சா கே ஏ. கே. பெருமிதத்துடன் கூறினார்.**

தஞ்சாவூர் மாவட்டத்தில் சில நிகழ்ச்சிகளில் கலந்துகொண்ட ஊரகத் தொழில் அமைச்சர் கே. ஏ. கே. நேற்று கும்பகோணத்தில் நிருபர்களிடையே பேசினார்.

அப்போது அவர் தமிழ்நாடு கைவினைப் பொருள் அபிவிருத்திக் கார்ப்பரேஷனான "பூம்புகார்" நிறுவனம் இந்தியாவில் மட்டுமின்றி வெளிநாடுகளிலும் செய்து வரும் பல்வேறு சாதனைகளை விளக்கினார்.

அவர் கூறியதாவது!— தமிழ்நாட்டின் தொன்மை வாய்ந்த சிற்பம், ஓவியம் கைவினைப் பொருள்களைச் செய்வது ஆகியவற்றை "பூம்புகார்" நிறுவனம் சிரியமுறையில் அபிவிருத்தி செய்து வருகிறது.

புகழ் வாய்ந்த சித்திரங்கள் மற்றும் சிற்பங்களை செதுக்கி அலங்கரிக்கப்பட்ட தேர் (ரதம்) ஒன்றை ஏற்கனவே பூம்புகார் நிறுவனம் மலேசியநாட்டுக்கு அனுப்பி வைத்திருக்கிறது

## புகழ் பரவுகிறது

இப்போது கோலாலம்பூரில் உள்ள பதுமலை வள்ளுவர் கோட்டத்தில் உலகப் பொதுமறையாம் திருக்குறளை அழகாக பொறிப்பதற்கான ஆர்டரை பெற்றிருக்கிறது. இந்தக் கட்டிடத்தில் ஆயிரத்து 330 குறள்களையும் சிற்பக் கலையுடன் செதுக்க இருக்கிறது. ஒவ்வொரு குறளும் சித்தரிக்கும் உண்மைப் பொருள்களை விளக்கும் வகையில் அந்த கட்டிடத்தில் சித்திரங்களையும் பூம்புகார் நிறுவனத்தைச் சேர்ந்த சிற்பிகள் படைப்பார்கள்.

தவிர ஜெனிவாவில் உள்ள சர்வதேச அனுமின் 'சக்தி கமிஷன் கட்டிடத்தின் மத்தியமண்டபத்தில மகாபாரத சித்தரங்களையும் "பூம்புகார்" நிறுவனம் தீட்டியிருக்கிறது.

தமிழ்நாடு கைவினைப் பொருள் அபிவிருத்திக் கார்ப்பரேஷனின் (பூம்புகார்) சிறப்பு இன்று உலகெங்கிலும் பரவி வருகிறது. இது தமிழ்நாட்டுக்கே பெருமைப்படத் தக்க விஷயம்.

இவ்வாறு அமைச்சர் கே.ஏ.கே. கூறினார்.

---

# கோலாரில் மீண்டும் துப்பாக்கிச் சூடு: 2பேர் சாவு

பெங்களூர், ஜூலை 7— கர்நாடக மாநிலம் கோலார் தங்கவயலில் நேற்று 2வது தடவையாக துப்பாக்கிச் சூடு நடந்தது.

கன்னட அரசு கன்னட மொழிக்கு முதல் அந்தஸ்து கொடுத்து, எல்லாப் பள்ளிகளிலும் அதைகட்டாயப்பாடமாக ஆக்கியிருக்கிறது.

இதை எதிர்த்து கோலார் தங்கவயலில் கடந்த திங்கட்கிழமை தமிழ் மாணவர்கள் ஆர்ப்பாட்டம் நடத்தினர். அப்போது போலீசார் நடத்திய துப்பாக்கிச்சூட்டில் சில மாணவர்கள் உயிர் இழந்தனர் என்று கூறப்பட்டது.

நேற்று மீண்டும் கோலார் தங்கவயலில் போலீசார் துப்பாக்கிச் சூடு நடத்தினார்கள். இதில் 2 மாணவர்கள் உயிரிழந்தனர் என்றும் 21 பேர் காயம் அடைந்தனர் என்றும் தெரிகிறது.

---

# ஓய்வு பெறும் அரசு ஊழியர்கட்கு பாராட்டு

சென்னை, ஜூலை 7— தொழில் வணிகத் துறையில் பணியாற்றி ஓய்வு பெற்ற ஊழியர்கள் ஆ. நல்லையய்யா, என். பஞ்சாட்சரம், என். கே. ராயப்பன் ஆகியோருக்கு பாராட்டுத் தெரிவிக்கும பிரிவு உபசார விழா சென்னையில் நல்லுறவு மன்றம் சார்பில் நடைபெற்றது.

இயக்குனர் எஸ். சிவசுப்ரமணியம் தலைமை வகித்தார்.

நல்லுறவு மன்றத் தலைவர் ஏ.ஆர். சுந்தர்ராஜ் பாராட்டிப் பேசினார்.

ராயப்பனுக்கு மன்றம் சார்பில் ரூபாய் 700.15 அன்பளிப்பாக அளிக்கப்பட்டது.

பொருட்காட்சி உதவியாளர் ஏழுமலை, வேதவல்லி ஆகியோர் பொருள்களை பரிசளித்தனா.

---

# ஜனாதிபதி தேர்தல்: தலைமை செயலகத்தில் வாக்குச் சாவடி

சென்னை, ஜூலை 7— ஜனாதிபதி தேர்தலுக்கு சென்னையில் அரசுத் தலைமைச் செயலக் கட்டிடத்தின் அடித்தளத்திலுள்ள சட்டமன்றக் குழுக்கள் கூடும் அறை வாக்குச்சாவடியாக இருக்கும். இம்மாதம் 12ந்தேதி காலை 10 மணி முதல் மாலை வரை வாக்குப் பதிவு நடைபெறும். இத்தகவலை இத்தேர்தலை நடத்தும் உதவி அதிகாரியாக உள்ள தமிழ்நாடு சட்டப் பேரவைச் செயலாளர் அழகர்சாமி தெரிவித்துள்ளார்.

---

# கண்டக்டர்வேலையில் சேர புதிய சலுகை: முத்துசாமி அறிவிப்பு

**கரூர், ஜூலை 7— பஸ் கண்டக்டர் வேலையில் சேர எஸ். எஸ். எல். சி.யில் தேறி இருக்கவேண்டும் என்ற நிபந்தனை தளர்த்தப் படுகிறது என்று அமைச்சர் முத்துசாமி அறிவித்தார்.**

போக்குவரத்துத்துறை அமைச்சர் முத்துசாமி நிருபர்களிடம் கூறியதாவது;-

அரசு போக்குவரத்துக் கழகங்களில் கண்டக்டர் வேலைக்குத் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் எஸ். எஸ். எல். சி. யில் தேர்வு பெற்றிருக்க வேண்டும்.

இனிமேல் எஸ். எஸ். எல். சி. யில் தவறிய மாணவர்களும் தேர்வு செய்யப்படுவார்கள்.

இது சம்பந்தமான முடிவை சம்பந்தப்பட்ட போக்குவரத்துக் கழகங்கள் எடுக்கும்.

டீசல் விலை உயர்வு, உதிரி பாகங்கள் விலை உயர்வு மற்றும் ஊழியர்களுக்கான சம்பள உயர்வு ஆகியவற்றினால் 1981-82ம் ஆண்டில் தமிழ்நாட்டிலுள்ள 8 போக்குவரத்துக் கழகங்களிலும் ரூ. 12 கோடி நட்டம் ஏற்பட்டது.

இவ்வாறு அமைச்சர் முத்துசாமி கூறினார்.

---

## கத்திவாக்கம் நகராட்சி நகரியம் ஒப்பந்தப் புள்ளி அறிவிப்பு

மூடி அரக்கு முத்திரையிட்ட ஒப்பந்தப்புள்ளிகள் 1982-83-ம் ஆண்டிற்கு கைபம்புகளை இந்நகராட்சி நகரிய எல்லையில் புதியதாக அமைக்கவும், பழுதடைந்த பம்பை மாற்றி அமைக்கவும், பழுதடைந்த பம்பை இன்னும் அதிக ஆழமாக அமைக்கும் வேலையினை நிர்வாக அதிகாரியால் அல்லது அவரது உத்திரவு பெற்றவர்களால் நகரிய அலுவலகத்தில் 19-7-82 மாலை 3.00 மணிவரையில் பெற்றுக் கொள்ளப்படும். அன்று மாலை 3.30 மணிக்கு வருகை தந்துள்ள ஒப்பந்ததாரர் முன்னிலையில் ஒப்பந்தப்புள்ளிகள் பிரிக்கப்படும். இதற்கான படிவம் நகரிய அலுவலகத்தில் மனுவின் மீது பெற்றுக்கொள்ளலாம். இதற்கான பொறுப்புத்தொகை ரூ.250 ரொக்கமாக செலுத்தி ஒப்பந்தப் புள்ளி கொடுக்க வேண்டும்.

(ஒம்)
உஸ்மான் அலிகான்,
நிர்வாக அதிகாரி (பொறுப்பு),
கத்திவாக்கம் நகரியம்.

கத்திவாக்கம் நகரியம்,
3-7-82.

## கனரக வாகன தொழிற்சாலை
### ஆவடி

ஜெனரல் மானேஜர் அவர்களால் (Trailing val canised Rubber Insulated four untapped covered one red. one blue one white and one green twisted together wormed Sheathed with tough rubber having tinned high conductivity annealed copper conductors) I. S. 434ன் படி 660-1100 வோல்ட்டுகள் —220-0.45 மிமி x 4கோர் ரவுண்டு கொண்ட பிளக்ஸிபிள் கேபிள் 300 மீட்டர்கள் சப்ளை செய்வதற்கான முத்திரையிட்ட டெண்டர்கள் 10-8-82 தேதிவரை வரவேற்கப்படுகிறது. டேவணித் தொகை டெபாஸிட் ரூ.1000 குறிப்பிட்ட டெண்டர் பாரம், 10-8-82 தேதிவரை ரூ.10க்கான கோடிட்ட போஸ்டல் ஆர்டர் இணைத்து சென்னை —600054, ஆவடி, கனரக வாகன தொழிற்சாலை, ஜெனரல் மானேஜர் அவர்கள் சார்பில் எடுத்து அனுப்ப வேண்டும். டெண்டர்கள், டெண்டர்தாரர்கள் முன்னிலையில், 10-8-82 பிற்பகல் 3 மணிக்குத் திறக்கப்படும்.

davp-685 (193)82

## மிலிட்டரி எஞ்ஜினியர் சர்வீஸஸ்

கீழ்க்கண்ட பணிகளுக்கு டெண்டர்கள் வழங்குவதற்கான விண்ணப்பங்களை, கமாண்டர் ஒர்க்ஸ் எஞ்ஜினியர், பல்லவன் சாலை 600002 அவர்கள் தகுதி வாய்ந்த வகுப்பில் அங்கீகாரம் பெற்ற ஒப்பந்ததாரர்களிடமிருந்து 12-7-82 வரை வரவேற்கிறார்.

(1. ஆவடியில் உள்ள கனரகவாகனத்தொழிற்சாலையில் சாலைகள் அமைத்தல், தோராய மதிப்புத்தொகை ரூ. 4.37 இலட்சம். காலம் 12 மாதங்கள். டேவணித் தொகை டெபாசிட் ரூ. 8800.

(2) ஆவடியில் உள்ள கனரக வாகனத் தொழிற்சாலையில் பாதுகாப்பு வேலி கட்டுதல். தோராய மதிப்புத் தொகை ரூ. 6.83 இலட்சம். காலம் 12 மாதங்கள். டேவணித் தொகை டெபாசிட் ரூ. 10,250-/- மேலும் விரிவான விவரங்களுக்கு 30-6-82 தேதியிட்ட இந்தியன் டிரேட் ஜர்னலைக் காணவும்.

டிஏவிபி 688 (362) 82

Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D.M.K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029.
Editor: E. PARASURAMAN.

கால்வாய் - கண்மாய்கள் நவீனப்படுத்த ஏற்பாடு:

# பாசன வசதிக்கு ரூ. ஆயிரம் கோடி திட்டங்கள்

## அமைச்சர் ராஜாமுகமது தகவல்

நாகர்கோவில், ஜூலை 7- ஆயிரம் கோடி ரூபாய்க்கு பல்வேறு பாசனத் திட்டங்கள் தீட்டப்பட்டுள்ளதாக அமைச்சா ராஜாமுகமது கூறினார்.

குமரி மாவட்டத்தில் நீர்பரப்பு கால்வாய் திட்டத்துக்கு அமைச்சர் ராஜாமுகமது அடிக்கல் நாட்டிப் பேசியதாவது:—

சுமார் 2 ஆயிரம் கிலோமீட்டர் நீளமுள்ள கால்வாய்களை நவீனப்படுத்தத் திட்டமிட்டிருக்கிறோம்.

முதல் கட்டமாக, காவிரிப் படுகையில் உள்ள கால்வாய்களை சீரமைக்க, 400 கோடி ரூபாய் செலவில் திட்டமிடப்பட்டு உலக வங்கியின் உதவிக்காக திட்டத்தின் சுருக்கத்தை அனுப்பியுள்ளோம்.

வைகை பெரியார் திட்டத்தின் கால்வாய்களை சீரமைக்க 70 கோடி ரூபாய் செலவில் திட்டம் தயாரிக்கப்பட்டுள்ளது. தாமிரபரணிதிட்டத்திற்கு ரூ.25 கோடி ஆகிறது.

தமிழகம் முழுவதிலுமுள்ள, 500 ஏக்கருக்குக் குறையாமல் பாசனம் தருகிற கண்மாய்களை முழுமையாகஆழப்படுத்தி நவீனப்படுத்த ரூ. 450 கோடி மதிப்பீட்டில் திட்டம் தயாரிக்கப்பட்டு திட்டத்தின் சுருக்கம் உலக வங்கியின் நிதி உதவிக்காக அனுப்பப்பட்டுள்ளது. ரூ. ஆயிரம் கோடி செலவுசெய்து இந்தத்திட்டங்களை நிறைவேற்ற வேண்டியிருக்கிறது.

### நீர், நிலவள பாதுகாப்பு

சுதந்திரமடைந்து 35 ஆண்டு காலத்தில் சுமார் 1 கோடி ஏக்கர் நிலத்தில் இருந்த மரங்கள் அழிக்கப்பட்டிருக்கின்றன. அதன் காரணமாக நீர்வளத்தையும் நிலவளத்தையும் இழந்து விட்டோம்.

சட்டத்திற்கு புறம்பாக மரங்களை வெட்டுபவர்களுக்கு கடுமையாக தண்டனை கொடுக்க வேண்டும். வனச் செல்வத்தைப் பாதுகாக்க வேண்டும். நீர்வளம் அதிகமாக வேண்டும். எதிர்காலச் சந்ததியினர் மரங்கள் அடர்ந்த பகுதிகளில் பசுமையாக வாழ வழி செய்யவேண்டும். இதைச் செய்யாவிட்டால், அவர்கள் பாலைவனத்தில் தான் வாழ்வார்கள்.

அனைத்துச் சட்டமன்ற உறுப்பினர்களுக்கும் ஒரு கடிதம் அனுப்பியிருக்கிறோம். "உங்களுடைய தொகுதியில் என்னென்ன பாசனத் திட்டங்கள் உள்ளன? எவைகளுக்கு முக்கியத்துவம் தரலாம்? என்று கேட்டு வாங்கி வைத்திருக்கிறோம்.

அவற்றில் பயன்விகிதம் முறைப்படி எத்திட்டம் அதிகப் பயனைத் தருகிறது? எந்தத் திட்டம் பின்தங்கிய பகுதியில் அமையவிருக்கிறது என்பதைப் பரிசீலித்து அவற்றிற்கு முன்னுரிமை காடுத்துஒன்றன்பின்ஒன்றாகசெயல்படுத்தப்படும்.

இவ்வாறு அமைச்சர் ராஜாமுகமது கூறினார்.

பாட்னாவில்

## ஜைல்சிங் தங்கி இருந்த இடத்தில் தீ விபத்து

பாட்னா, ஜூலை 7— ஜனாதிபதி பதவிக்கு இந்திரா காங்கிரஸ் வேட்பாளராகப் போட்டியிடும் ஜைல்சிங் பாட்னாவில் தங்கி இருந்த இடத்தில் தீவ்பத்து ஏற்பட்டது.

ஜைல்சிங் பீகார்மாநிலத்தில்தனக்குஆதரவுதிரட்ட பாட்னா வந்திருந்தார். அரசு விருந்தினர் மாளிகையில் தங்கி இருந்தார்.

விருந்தினர் மாளிகையில் திடீர் என்று தீ விபத்து ஏற்பட்டது. தீயணைக்கும் எஞ்சின்கள் விரைந்து வந்தன.

ஜைல்சிங்கை விருந்தினர் மாளிகையிலிருந்து ஒரு ஓட்டலில் தங்க ஏற்பாடு செய்தனர்.

(8-ம் பத்தி தொடர்ச்சி)

பெரிதும் பயன்படும்.

இந்த சத்துணவுத் திட்டத்தைக் கேலி செய்பவர்கள் தன்னிறைவுத் திட்டத்தைக்கேலி செய்தவர்கள் தான். இந்தியாவே வியக்கும் அளவுக்கு தன்னிறைவுத் திட்டம் எப்படி வெற்றி பெற்றதோ அதைப் போன்று உலகமே வியக்கும் அளவுக்கு இந்த சத்துணவுத் திட்டம் வெற்றிபெறும்.

நமது முதல்வர் அவர்களின் நேரடிப் பார்வையில் இத்திட்டம் செயல்படுவதால் எந்த தவறும் நடைபெறாது இத்திட்டம் வெற்றி பெறும். உணவில்லாது தவித்த தனது குழந்தை ஒருவேளை உணவு அருந்துவதற்கு வாய்ப்புக் கிடைத்ததை உணர்ந்து சிரிக்கிறாளே ஏழைத் தாய் அந்த ஏழைத் தாயின் சிரிப்பிலேதான் அண்ணா காண விரும்பிய இறைவனை புரட்சித் தலைவர் காணுகிறார்,

இவ்வாறு எஸ். என். ராசேந்திரன் கூறினார்.

வை. பெருமாள் தந்தையார் மறைவு:

## கதர் வாரிய தொழிலாளர் இரங்கல்

சென்னை, ஜூலை 7- அண்ணா தொழிற் சங்கப் பேரவைப்பொதுச் செயலாளர் வை. பெருமாளின் தந்தையார் மறைவுக்கு அண்ணா கதர் கிராமத் தொழில் வாரியத் தொழிலாளர் சங்கம் இரங்கல் தெரிவித்துள்ளது.

இந்தச் சங்கத்தினர் கூடி இரங்கல் தீர்மானம் நிறைவேற்றினார்கள்.

அகில இந்தியவிவசாயிகள் சங்கத் தலைவர்

## பதவியில் இருந்து நாயுடு நீக்கம்

சென்னை, ஜூலை 7— அகில இந்திய விவசாயிகள் சங்கத் தலைவர் பதவியில் இருந்து சி. நாராயணசாமி நாயுடு நீக்கப்பட்டுள்ளார்.

சங்க துணைத்தலைவர் மேஜர் ஈஸ்வர்தயாள் தியாகியும், செயலாளர் பல்வீர்சிங் ரஜேவாலும் இதனை அறிவித்துள்ளனர்.

சங்கத்தின் அடிப்படைக் கொள்கையில் இருந்து நாயுடு மாறிவிட்டதாக அவர்கள் குற்றம் சாட்டியுள்ளனர்.

விரைவில் புதிய தலைவர் தேர்ந்து எடுக்கப்படுவார் என்று அவர்கள் கூறியுள்ளனர்.

அமைச்சர் ராஜேந்திரன் பேச்சு:

# அண்ணாவின் கனவை நனவாக்கும் இலவச உணவுத் திட்டம்

தூத்துக்குடி, ஜூலை 7- ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காண்போம் என்று அறிஞர் அண்ணா கூறினார். அவருடைய கனவை நனவாக்க புரட்சித்தலைவர் வகுத்த திட்டம் தான் இலவச சத்துணவுத் திட்டம் என்று அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் கூறினார்.

நெல்லை மாவட்டத்தில் குழந்தைகளுக்கு இலவச உணவு அளிக்கும் திட்டத்தினை சில்வர்புரத்தில் தொடங்கி வைத்துப்பேசுகையிலேயே அமைச்சர் மேற்கண்டவாறு கூறினார்.

கதர் மற்றும் பொதுப் பணித்துறை அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் பேசுகையில் குறிப்பிட்டதாவது:

தமிழக முதல்வர் தனது இளம் வயதில் உணவுக்காக பெருந்துயரங்களை அனுபவித்தவர். அதனை உணர்ந்து தமிழகத்தில் குழந்தைகள் உணவுக்காக அந்தத் துயரங்களை அனுபவிக்கக் கூடாது என்ற நல்லெண்ணத்தில் தான் இலவச உணவுத் திட்டத்தைக் கொண்டு வந்துள்ளார். ஒரு வேளை உணவு கூட தனது குழந்தைகளுக்கு கொடுக்க இயலாத நிலையில் எத்தனையோ தாய்மார்கள்வேதனைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். அந்த தாய்மார்கள் உள்ளம் குளிரும் வண்ணம் புரட்சித்தலைவர் இலவச உணவுக்கு ஏற்பாடு செய்துள்ளார். இதன் மூலம் 62 லட்சம் குழந்தைகள் பயன்பெறும் வாய்ப்பைப் பெற்றுள்ளனர்.

தான் பெற்ற குழந்தைகளுக்கு உணவு கொடுக்க வழியில்லாது தவித்த தாய்மார்கள் இன்று தனது குழந்தைகள் உணவு உண்ண உத்தரவாதம் கிடைத்ததை எண்ணி எந்த அளவு மகிழ்ச்சி அடைவார்கள் என்பதை எண்ணிப்பார்க்கக் கடமைப் பட்டுள்ளோம். மேலும் வெறும் உணவு மட்டும் பெயரளவில் கொடுக்காமல், சத்தான உணவைக் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. அதுவும் ஒரே மாதிரியான உணவை மாதம் முழுவதும் கொடுத்தால் குழந்தைகளுக்கு சாப்பிடவிருப்பம் இருக்காது என்று ஒவ்வொரு நாளும் மாறுதலான உணவுவகைகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

இத்திட்டத்தை செயல்படுத்த 60 ஆயிரம் தாய்மார்கள் நியமிக்கப்பட்டு அவர்கள் பொறுப்பில் இக்குழந்தைகளுக்கு உணவுஅளிக்கப்படுகிறது. உணவு கொடுப்பதோடு அந்தக் குழந்தைகளுக்கு உலக ஞானமும் கொடுக்கும் பொறுப்பை அந்த 60 ஆயிரம் தாய் மார்கள் ஏற்றுக் கொள்வார்கள்.

### பழைய திட்டமா?

இத்திட்டம் ஏற்கனவே காமராஜர் காலத்தில் ஏற்படுத்தப்பட்ட நண்பகல் உணவுத் திட்டம் தான் என்று யாரும் தவறாகக் கருதிவிடக்கூடாது. காமராஜர் திட்டத்தில் ஐந்து வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளுக்கு அதுவும் பள்ளியில் படிக்கும் குழந்தைகளுக்கு பள்ளி நடைபெறும் நாட்களில் மட்டும்தான் உணவு வழங்கப்பட்டது. புரட்சித்தலைவரின் சத்துணவுத் திட்டத்தில் 2 வயது முதல் 14 வயது வரையுள்ள வறுமைக் கோட்டிற்குக் கீழ் உள்ள எல்லாக் குழந்தைகளுக்குப் வருடம் முழுவதும் மதிய உணவு அளிக்கப்படுகிறது.

### உலகே பாராட்டுகிறது

பணக்காரர்கள் வீட்டுப் பிள்ளைகளைப் போல் ஏழைகளின் பிள்ளைகளும் வளர இந்த சத்துணவுத் திட்டம் வகை செய்கிறது. இந்தியாவிலேயே தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் தான் ஏழைகள் மிகுதியாக உள்ள கிராம மக்களின் வசதிகளைப் பெருக்க கிராமத்திலே தண்ணீர் வசதி செய்து கொடுத்தல், ரோடுகள் போட்டு சாலை வசதிகளை ஏற்படுத்துதல் போன்ற பல நல்ல காரியங்களுக்கு முன்னுரிமை அளித்து செயல்படுகிறார். அத்தகைய நல்ல காரியங்களில் ஒன்றாக இந்த இலவச உணவுத் திட்டமும் கிராமத்துக் குழந்தைகளுக்கே

(2-ம் பத்தி பார்க்க)

# ஆதிதிராவிடர்கட்கு உதவ ரூ.75 லட்சத்தில் புதிய திட்டங்கள்

தஞ்சை, ஜூலை 7- ஆதி திராவிட மக்களுக்கு உதவ ரூ 75 லட்சத்தில் புதிய திட்டங்கள் தீட்டப்பட்டுள்ளன.

ஆதிதிராவிட மக்கள் குடியிருப்பு பகுதிக்கு தன்னிறைவுத் திட்டத்தின் கீழ் பல்வேறு வசதிகளைச் செய்து தர புரட்சித்தலைவர் அரசு புதிதாக ரூ. 75 லட்சம் ஒதுக்கியுள்ளது.

ஆதி திராவிடர் குடியிருப்புக்கு குடிநீர் வசதி செய்து தருதல், ரோடு வசதிகள் செய்து தருதல், சுடுகாட்டுக்குச் செல்லும் பாதை அமைத்தல் போன்ற பணிகள் இத்திட்டத்தின் கீழ் செய்யப்படும்.

இத்தகவலை தஞ்சை கலெக்டர் மெய்கண்டதேவன் நிருபர்களிடம் தெரிவித்தார்.

## அமைச்சர் ராஜாமுகமது நிகழ்ச்சிகள்

ஜூலை 9 காலை- போடி சட்டமன்ற உறுப்பினர் இல்லத் திருமணம்.

ஜூலை 10 காலை- கொடைக்கானல் பகுதி இலவச உணவு திட்டப் பணிகளை பார்வையிடுதல். மாலை 3-மணி வில்பட்டியில் பாரதி விழா நிகழ்ச்சிகள்.

ஜூலை 11: சென்னை.